‘உங்கள் சிறகுகளில் நான் அமைதியை எழுதுகிறேன். நீங்கள் பூமியெங்கும் பறந்து செல்லுங்கள்’ மானசீக ஆசிரியராக நான் நேசிக்கும் சசாகியின் கடைசிநேர வார்த்தைகள் இது. சாதாரண காகிதம் கொக்காகவும், யானையாகவும், தும்பியாகவும் மாறி உருவங்கள் கொள்வதும் ... உயிரில்லாத அந்த உருவங்களை குழந்தைகள் உயிர்களாக பாவித்து தங்கள் உலகங்களுக்குள் நடமாட வைப்பதுமே புரட்சியாகவும் மாறுதலாகவும் நான் நம்புகிறேன். இது நான் குழந்தைகளிடம் கற்றுணர்ந்த ஞானம்.

**தன்னறம் ■ குக்கூ காட்டுப்பள்ளி**





கொக்குகளுக்காகவே வானம்
தியாக சேகர்

முதல் பதிப்பு
2017 ஆகஸ்ட் 6 ஹிரோஷிமா தினம்

புகைப்படம்
வினோத் பாலுச்சாமி

வரைபடங்கள்
சண்முகவடிவேல்

வடிவமைப்பு
கல்ஆல்

வெளியீடு
தன்னறம்
குக்கூ காட்டுப்பள்ளி,
புளியானூர் கிராமம்,
சிங்காரப்பேட்டை - 635 307
கிருஷ்ணகிரி மாவட்டம்
பேச : 9843870059
cuckoochildren@gmail.com

அச்சாக்கம்
ஜோதி ஸ்கேன்ஸ்
சென்னை

நன்கொடை
ரூ. 65





**படையல்**

சதாகோ சசாகிக்கும்

திருப்பூர் காதுகேளாதோர் பள்ளி தந்தை முருகசாமி ஐயாவுக்கும்

காகிதத்திலிருந்து பிறக்கிற
உருவாக்கங்கள் முடிவில்லாதவை.
நம் கைகளால் நாமே உருவாக்கும்
படைப்பின் மூலம் கிடைக்கும் மகிழ்ச்சியை
எல்லோரும் அனுபவிக்கவேண்டும்
என்பதே எனது பிரார்த்தனை.

— அகிரா யோஷிசவா

ஓரிகாமி எனப்படும் காகித மடிப்புக்கலை ஜப்பானிய பாரம்பரிய கலை. ஜப்பான்மொழியில் ஓரி என்றால் மடித்தல், காமி என்றால் காகிதம். இந்த இருவார்த்தைகளின் சேர்க்கையே ஓரிகாமி என்றழைக்கப்படுகிறது. வெட்டி ஒட்டாமலும், பசைகளை பயன்படுத்தாமலும் சதுரமான காகிதம் வெவ்வேறு உருவங்களாக இக்கலையின் மூலம் உருவாக்கப்படுகிறது. கணித வடிவங்களை விளக்கும் வடிவியலிலும், முப்பரிமாண பொருளுருவாக்கத்திலும் இதன்பங்கு முதன்மையானது.

அகிரா யோஷிசவா, ஜப்பானிய காகித மடிப்புக் கலையின் தந்தையாக கருதப்படுகிறார். காகிதங் களில் உயிர் உருவங்களை உருவாக்கும் மடித்தல் முறையில் ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்ட வடிவமைப்புகளைப் படைத்திருக்கிறார்.

ஜப்பானிய மரபுக்கலையான ஓரிகாமியை தனது சிறுவயதிலிருந்து கற்கத் தொடங்கிய இவர், இரண்டாம் உலகப்போரில் பாதிப்படைந்த மக்களை இராணுவத்தின் மருத்துவ முகாம்களுக்கு சென்று சந்தித்து இக்கலை வழியாக வாழ்வின் மீதான நம்பிக்கை அளித்தார்.

காகித மடிப்புக்கலையில் பல்வேறு நுட்பங்களை கண்டுபிடித்த அகிரா யோஷிசவா, நனைத்து மடித்தல் என்னும் புதுவித நுட்பத்தை காகித உலகிற்கு தந்திருக்கிறார். இது காகிதச் சிற்பம் போன்ற உயிர்த்தன்மையை பொம்மைகளுக்கு வழங்கியது.

விருதுகள், கௌரவிப்புகள், அவரைப்பற்றிய புத்தகங்கள் என எல்லா எல்லைகளையும் கடந்து கலைபரப்பிய இந்த ஞானஆசான் தன்னுடைய தொண்ணூற்று நான்காம் வயதில் இயற்கையில் கரைந்தார்.





## என்னிலிருந்து...

இப்பொழுதில் நின்று வாழ்வை திரும்பிப் பார்த்தால், வாழ்க்கையை தீவிர விருப்பத்தோடும் பிடிவாதத்தோடும் வாழவிரும்பிய எல்லோருக்கும் என்னென்னவெல்லாம் நேர்ந்ததோ அவைகளே எனக்கும் நேர்ந்திருக்கிறது. ஏதோவொரு வகையில் ஒரு புத்தக வாசிப்போ, ஒரு இசை கேட்டாலோ அல்லது மனிதர்களிடமிருந்து அடைகிற நிறைவுகளோ ... எல்லாமே என்னை ஒரு உதிரியாக இந்நிலப்பரப்பெங்கும் அலைந்துதிரிய வைத்தது.

கல்லூரிப்படிப்பை முடித்துவிட்ட அச்சமயத்தில், அருள் என்ற நண்பரின் வழியாக அறச்சலூரில் குக்கூ எனக்கு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அறிமுகமாகியது. அதன்பிறகு எனக்குள் உருவான உலகமும், அந்த உலகம் உருவாக்கிய மனிதர்களும் ஏராளமானவை. அப்போது எனக்குத் தெரியாது, உதிரிகளின் ஒட்டுமொத்த அந்த கூட்டுவட்டத்துக்குள் நானும் ஒருவனாகிப் போவேன் என்பது. இப்போது யோசித்துப் பார்க்கிறேன். எதுவுமே இல்லாத நிர்கதியில் நான் நின்றபோது இப்போது யோசித்துப் பார்க்கிறேன். எதுவுமே இல்லாத நிர்கதியில் நான் நின்றபோது தாங்கிப்பிடித்த நம்மாழ்வார் தொடங்கி இந்தப் புத்தகத்துக்கான வரைபடங்களை இரவுபகலாக வரைந்து தந்த ஓவியன் வரைக்கும் அத்தனை மனிதர்களையும் அந்த நல்லதிர்வையும் நான் திரும்பத்திரும்ப நினைத்துக்கொள்கிறேன்.

தீவிரமான புரட்சிகுறித்த பெரிய நம்பிக்கை நெடுங்காலம் எனக்கிருந்தது. ஆனால், சாதாரண வெள்ளைத்தாள் ஒரு குழந்தையின் கையில் பொம்மையாக மாறும்போது அந்தப்புரட்சியை அங்கு பார்த்தேன். இந்தப் புள்ளியிலிருந்தே துவங்குகிறது அத்தனை மாறுதல்களும் என்று உணர்ந்துகொண்டேன்.

இந்த மூச்சுக்காற்று வரை என் வாழ்வுக்கு உதவின அத்தனை நல்லுள்ளங்களையும் நான் வணங்குகிறேன். ஓரிகாமியின் தந்தை அகிரா யோஷிசவா முதல் இப்போது ஊத்துக் குளியில் காகிதம் மடித்து பொம்மை செய்யும் குழந்தைவரை தொடர்கிற அந்த ஆற்றல் ஓட்டத்தின் சின்னத்தின் சின்னத்துணுக்குதான் நான்தவிர, இதற்குள் எனக்கு எவ்விதப் பெருமிதமும் இல்லை.

காகித மடிப்புக்கலையை கற்பித்து விட்டு திரும்பும்போது குழந்தைகளுக்கு கொடுப்பதற்காக என் கைகளில் எதுவுமே இல்லாமல் இருந்தது. அந்த உறுத்தலைப் போக்கும் வகையில் இந்தப் புத்தகத்தை அவர்களிடம் கொடுத்தால், அந்தப் புத்தகங்கள் இன்னும் நிறைய முகமறியாத குழந்தைகளின் கற்றலுக்கு சிறியஅளவில் துணைபுரியும் என நம்புகிறேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக... கடைசிவரைக்கும் என்னைப் பற்றிய கவலைகளைச் சுமந்தே காற்றில் கரைந்துபோன என்னுடைய தாயையும் தந்தையையும் கண்ணீர் கசிந்து கும்பிடுகிறேன்.

*தியாகசேகர்*
*9677078360*
*gunasekar706@gmail.com*



# அமைதியின் சிறகுகள்

ஆகஸ்ட் 6, 1945. உலகம் மறக்க முடியாத நாள். அன்றுதான் உலகின் முதல் அணுகுண்டு, ஜப்பான் நாட்டின் ஹிரோஷிமா நகர் மீது வீசப்பட்டது. அதன் பிறகு ஆகஸ்ட் 9, 1945 அன்று நாகசாகி மீதும் வீசப்பட்ட அணுகுண்டுகளின் நெடியை இன்றும் சுமக்கிறது உலகம்.

குண்டுவெடிப்பு நிகழ்ந்து, 69 ஆண்டுகள் கழிந்து விட்டன; பேரழிவின் சுவடுகள் கூட மறைந்து விட்டன. எனினும் அழிவின் வரலாற்றுக்குச் சாட்சியாக நிற்கின்றன அந்த இரு நகரங்களும். சர்வநாசத்துக்குப் பிறகு ஃபீனிக்ஸ் பறவைபோல மீண்டு எழுந்து, இன்று உதாரண நகரங்களாக அவை ஜொலிக்கின்றன. அந்த அபார மீட்புப் பணியில் ஒட்டுமொத்த ஜப்பானையும் ஒருங்கிணையச் செய்ததில் சிறுமி சசாகிக்கும் பெரும் பங்கு இருக்கிறது. ஜப்பானில் ‘சசாகி’ என்றால், உலக அமைதியின் உருவம். வருடந்தோறும் அமைதி நாள் அன்று எண்ணற்ற ஜப்பான் குழந்தைகள், காகிதக் கொக்கை கையில் ஏந்தியிருக்கும் சசாகியின் சிலையின் கீழ் நின்று, உலக அமைதிக்காக கண்ணீர் பிரார்த்தனை செலுத்துகிறார்கள்.

ஏன் ... யார் இந்த சசாகி?

இப்போது ஜப்பானின் பள்ளிப்பாடப் புத்தகங்களில் நாயகியாக வலம்வரும் சதாகோ சசாகிக்கு, 1954-ம் ஆண்டில் 12 வயது. மற்ற எல்லா சிறுமிகளைப்போலவே உற்சாகம் நிறைந்த ஓர் உலகத்தில் வாழ்ந்தாள் சசாகி. சில வருடங்களுக்கு முன்பு அவள் வாழ்ந்த ஹிரோஷிமா நகரத்தில் நடந்த அணுகுண்டு வெடிப்பைப் பற்றி மிக மங்கலான நினைவுகளே அவளுக்கு இருந்தன. குண்டு வெடித்தபோது அவளுக்கு இரண்டு வயது. தனது உறவினர்கள் பலரை அந்தக் குண்டு வெடிப்பில் இழந்திருந்தாள்.

வருடம் தவறாமல் இறந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்துவது அவள் வழக்கம். தவிரவும், தான் ஓர் ஓட்டப் பந்தய வீராங்கனையாக உருவாக வேண்டும் என விரும்பி, அதற்கான தயாரிப்புகளில் தன்னை முழுமையாக ஈடுபடுத்தியிருந்தாள் சசாகி. அன்று பள்ளியில் ஓட்டப் பந்தயம். அவள் கவனம் முழுவதும் பந்தயத்திலேயே இருந்தது. சசாகியின் குடும்பமே அவளது வெற்றியைக் கொண்டாடக் காத்திருந்தது. ஆனால், போட்டியின் முடிவில் வெற்றிக் கூச்சல்கள் அவள் காதுகளை வந்தடைய வெகுநேரம் ஆனது. அன்றுதான் முதன்முதலாக சசாகிக்குத் தலைசுற்றத் தொடங்கியது. அதன் பிறகு பலமுறை தலை சுற்றல்கள் இருந்தாலும் அதைப் பற்றி சசாகி யாரிடமும் சொல்லவில்லை... ஒருநாள் மயங்கி விழும் வரை!

மருத்துவமனையில் அவளுக்கு ‘அணுகுண்டு நோய்’ லுகேமியா தாக்கியிருப்பது கண்டுபிடிக்கப்பட்டபோது, சசாகியின் உலகம் நொறுங்கியது. அப்போது பரவலாக பலரைத் தாக்கிய லுகேமியாவுக்குக் காரணம், அணுகுண்டு வெடிப்பு உமிழ்ந்து கொண்டிருந்த கதிரியக்கம்.

நம்பிக்கையின்மையின் நிழலில் மருத்துவ மனையிலேயே பல வாரங்கள் கழித்த சசாகியிடம் அவளது உயிர்த் தோழி சிசுகோ ஒரு தங்க நிற காகிதக் கொக்கைப் பரிசளித்தாள். ‘இது உனது முதல் கொக்கு. இதுபோல 1,000 கொக்குகள் செய்தால், நீ குணம் அடைவாய்’ எனச் சொன்னாள் சிசுகோ. ஜப்பானின் மிகப் பிரபல கலைவடிவம் ஒரிகாமி. காகிதங்களைக் கொண்டு விதவிதமாக மரம், செடி, கொடி, விலங்குகள் எனப் பல வடிவங்களைச் செய்யும் கலை.

அப்படி 1,000 ஒரிகாமி கொக்குகளைச் செய்தால் தீராத நோயையும் குணப்படுத்திவிடலாம் என்பது ஜப்பானியர்கள் நம்பிக்கை. 1,000 ஒரிகாமி கொக்குகள் என்பது, ஜப்பானின் கலாசாரத்தில் தவிர்க்க இயலாத ஒரு நடைமுறை. மகளின் திருமணத்தின் போது அவள் 1,000 வருடங்கள் மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும் என 1,000 ஒரிகாமி கொக்குகளைப் பரிசு அளிப்பார் பெண்ணின் அப்பா. பிறந்த குழந்தைக்குக் கிடைக்கும் பரிசும் அதுவே. காரணம், வீட்டில் 1,000 ஒரிகாமி கொக்குகள் இருந்தால், அந்த வீட்டில் வளம்கொழிக்கும் என்பது ஜப்பானியர்கள் நம்பிக்கை.

எப்போதும்போல் இல்லாமல், அந்த ஒற்றைக் கொக்கு கைக்கு வந்த நாளின் இரவை மிக பாதுகாப்பாக, அமைதியாக உணர்ந்தாள் சசாகி. அப்போதுமுதல் கொக்குகள் செய்வதைத் தவிர, அவளுக்கு வேறு எதிலும் சிந்தனை இல்லை.

10, 20, 100… எனச் செய்யச் செய்ய காகிதங்கள் கிடைக்காமல் மருந்துச் சீட்டு, மாத்திரை கவர் என, கிடைத்த அனைத்து காகிதங்களையும் சேகரித்து கொக்குகள் செய்தாள் சசாகி. அப்போதுதான் மருத்துவமனையில் கெஞ்சியைச் சந்தித்தாள். கெஞ்சி அவளைவிட சிறியவன். அவனுக்கும் அணுகுண்டு நோய். தன்னிடம் இருந்த மிக அழகான காகிதத்தில் கொக்கு செய்து கெஞ்சிக்குப் பரிசாக அளித்தாள் சசாகி. ‘எனக்கும் கொக்கு செய்யத் தெரியும். ஆனால், இப்போது என்னை கடவுளர்களாலும் காப்பாற்ற முடியாது’ என்றான் அவன். அடுத்த சில நாட்களிலேயே கெஞ்சி இறந்து விட்டான். வெகுநாட்களுக்குப் பிறகு அன்று இரவு சசாகி அழுதாள். அவளது நம்பிக்கை கரைந்துகொண்டிருந்தது. ‘இன்னும் சில கொக்குகள் தான். இதோ தூங்குவதற்கு முன்பு ஒன்றைச் செய்து முடி. பிறகு, நீ பாட்டிபோல வாழ்வாய்’ என்றார் அங்கிருந்த செவிலியர்.

இப்போது சசாகியிடம் 300 கொக்குகள் இருந்தன. கொஞ்சம் உடல்நிலை தேறி, அவள் வீடு திரும்பி யிருந்தாள். ஆனாலும் சசாகி கொக்குகள் செய்வதை விடவில்லை. 500 கொக்குகளை நெருங்கும்போது சசாகிக்கு உடல்நிலையில் மீண்டும் பிரச்னை. ‘இன்னும் 500 கொக்குகள்தான். முடித்துவிட்டால் சரியாகிவிடும்’ என சமாதானம் சொன்னாலும், சசாகியை மீண்டும் மருத்துவமனையில் சேர்க்க வேண்டியிருந்தது.



அன்று மருத்துவமனையில் 644-வது கொக்கை சசாகி மடித்துக்கொண்டிருந்தாள். ஆனால், முந்தைய கொக்குகளைப்போல நேர்த்தியாக இல்லை அது. உறுதியை இழந்துகொண்டிருந்த விரல்களில் இருந்து அதற்குமேல் நேர்த்தி சாத்தியம் இல்லாமல் போனது.

அந்த அழகற்ற கொக்கைக் கையில் எடுத்த சசாகியின்அம்மா, ‘சொர்க்கத்தில் இருக்கும் கொக்குகளே… உங்களது சிறகுகளால் எனது மகளைப் பாதுகாப்பீர்களாக!’ எனப் பிரார்த்தனை செய்தது, சசாகியின் காதுகளில் தெளிவாக விழுந்தது.

அக்டோபர் 25, 1955-ல் சசாகி இறந்துவிட்டாள். அவள் செய்யாமல் விட்ட மீதமுள்ள 356 கொக்குகளை, அவளுக்காக அவளது தோழிகளும் வகுப்பினரும் செய்தார்கள். 1,000 கொக்குகளுடன் சசாகியை வழியனுப்ப வேண்டும் என்பது அவர் களுடைய ஆசை.

1958-ல் சசாகியின் நினைவாக, அவளைப்போல இறந்த எண்ணற்ற குழந்தைகளின் நினைவாக, ஹிரோஷிமா அமைதிப் பூங்காவில் கொக்கைப் பறக்கவிடும் சசாகியின் சிலை நிறுவப்பட்டது.

அணு ஆயுதப் போருக்கு எதிராக அமைதியின் சின்னமாக இன்றும் திகழும் அந்தச் சிலைக்கு, வருடத்துக்கு ஒருமுறை அமைதி நாள் அன்று வந்து, காகிதக் கொக்கு மாலைகளைச் சூட்டுவார்கள் ஜப்பான் நாட்டுக் குழந்தைகள்.

அந்தச் சிலையின் கீழ் ஜப்பான் குழந்தைகளின் தீராத ஏக்கத்தைப் பிரதிபலிக்கும் இந்த வாசகம் பொறிக்கப்பட்டிருக்கும்…

‘இதுதான் எங்கள் அழுகுரல்
இதுதான் எங்கள் பிரார்த்தனை
உலக அமைதி!’

இனி யாரும் தன்னைப்போல உயிர் இழக்கக் கூடாது என்பதுதான் சசாகியின் எளிய பிரார்த்தனை. ஆனால், சசாகியின் அந்த இறுதி விருப்பம் இன்று வரை நிறைவேறவில்லை! ஒவ்வொரு வருடமும் ஆகஸ்ட் 6-ம் தேதி சசாகியின் சிலை முன்பு கூடும் குழந்தைகளின் பிரார்த்தனையும் அதுதான்!

ஆனால், இன்றும் அந்தக் குழந்தைகளின் அழுகுரல்களும் பிரார்த்தனைகளும் எட்டாத தொலைவிலேயே நாம் இருக்கிறோம் என்பதற்கு, ஈழத்திலும் பாலஸ்தீனத்திலும் குழந்தைகள் மீது நடத்தப்பட்ட தாக்குதல்களே சாட்சி. 13 வயது இமானை குற்றவுணர்வு இல்லாமல் கொல்கிறது இஸ்ரேல். பிறந்த குழந்தைகளை போர் என்ற பேரில் கொல்வது தான் மனிதன் அடைந்திருக்கும் பரிணாம வளர்ச்சியா? உலக அமைதி உண்மையில் மலர இன்னும் எத்தனை அழுகுரல்கள் தேவை? எத்தனை ஆயிரம் கொக்குகள் தேவை?

கோ. சுந்தர்ராஜன்

பூவுலகின் நண்பர்கள்

# அடிப்படை மடிப்பு
# அதற்கான குறியீடுகள்






அடிப்படை மடிப்பு
அதற்கான குறியீடுகள்



## ராக்கெட்


1
புள்ளிக்கோட்டில்
மடித்து விரிக்கவும்
2
நடுக்கோட்டிற்கு மேல்
பாதியாக மடிக்கவும்
3
திருப்பவும்
4
இரண்டு முனைகளையும்
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
5
இரண்டு முனைகளையும்
மையத்தை நோக்கி மடிக்கவும்
6
மையத்திலிருந்து வெளிப்புறமாக
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
7
திருப்பவும்
8

## பூனை


1
பாதியாக மடிக்கவும்
2
பாதியாக மடித்து கோடு உருவாக்கவும்
3
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
4
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
5
திருப்பவும்
6
முகத்தை
வரைந்து
கொள்ளவும்

# நாய்


1
2
பாதியாக மடித்து
நடுக்கோடு உருவாக்கவும்
பாதியாக மடிக்கவும்
4
3
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
புள்ளிக்கோட்டில் மடிக்கவும்
5
6
மேல்நோக்கி மடிக்கவும்
கண் மூக்கு
வரைந்தால் நாய்

# பென்சில்


பாதியாக மடித்து
விரிக்கவும்
இடது பக்கம்
மேல் முனை
உள்நோக்கி
மடிக்கவும்
திருப்பவும்
இடது பக்கம்
மேல் முனை
உள்நோக்கி
மடிக்கவும்
திருப்பவும்
வலது பக்கத்தை
உள்நோக்கி மடிக்கவும்

## வீடு



பாதியாக மடித்து
விரிக்கவும்
வலது இடது பக்கம்
ஓரத்தை மையத்தை நோக்கி
மடிக்கவும்
மேல் கீழ் பக்கம்
ஓரத்தை மையத்தை
நோக்கி மடிக்கவும்
திறக்கவும்
புள்ளிக்கோட்டின்படி
திறக்கவும்
மட்டப்படுத்தவும்
புள்ளிக்கோட்டில்
மடிக்கவும்
கதவு ஜன்னல்
வரைந்தால்
வீடு!




## காத்தாடி



பாதியாக மடித்து
விரிக்கவும்
வலது இடது பக்கம்
ஓரத்தை மையத்தை
நோக்கி மடிக்கவும்
மேல் கீழ் பக்கம்
ஓரத்தை மையத்தை
நோக்கி மடிக்கவும்
திறக்கவும்
புள்ளிகோட்டின் படி
திறக்கவும்
மட்டப்படுத்தவும்
புள்ளிக்கோட்டில்
மடிக்கவும்



புள்ளிக்கோட்டில்
மடிக்கவும்
சிறிதாக திறந்து
இடைவெளி
உருவாக்கவும்
காத்தாடி




# சமுராய் தொப்பி



1
பாதியாக மடிக்கவும்
2
இரண்டு
மேல் முனைகளையும்
கீழ்நோக்கி மடிக்கவும்
இரண்டு
கீழ் முனைகளையும்
மேல்நோக்கி மடிக்கவும்
இரண்டு
மேல் முனைகளையும்
கீழ்நோக்கி மடிக்கவும்
கீழ் முனையை
புள்ளிக்கோட்டின்படி
மடிக்கவும்
அதே முனையை
புள்ளிக்கோட்டின்படி
கீழ்நோக்கி மடிக்கவும்
பாதியாக பின்புறம்
மடிக்கவும்

## மீன்


1
2
பாதியாக மடிக்கவும்
இரண்டு
மேல் முனைகளையும்
கீழ்நோக்கி மடிக்கவும்
இரண்டு
கீழ் முனைகளையும்
மேல்நோக்கி மடிக்கவும்
இரண்டு
மேல் முனைகளையும்
கீழ்நோக்கி மடிக்கவும்
கீழ் முனையை
புள்ளிக்கோட்டின்படி
மடிக்கவும்
அதே முனையை
புள்ளிக்கோட்டின்படி
கீழ்நோக்கி மடிக்கவும்
பாதியாக பின்புறம்
மடிக்கவும்



## மீன்


வலது பக்க முனையை
1 செ.மீ. மடிக்கவும்.
மூன்று பக்கமும்
வெட்டவும்
முன் பின் காகிதங்களை
வலது புறம் நோக்கி
புள்ளிக்கோட்டின்படி
மடிக்கவும்

# கப்பல்


இடம் வலகமாக
பாதியாக மடித்து
விரிக்கவும்


மேலும் கீழும்
பாதியாக மடித்து
விரிக்கவும்


பாதியாக மடித்து
இரு மேல்முனைகளையும்
உள்நோக்கி மடிக்கவும்


புள்ளிக்கோட்டின்படி
முன்பின் காகிதங்களை
மேல்நோக்கி மடிக்கவும்


முன்னும்
பின்னும்
மட்டப்படுத்தி இழுக்கவும்


முன்னும் பின்னும் உள்ள
கீழ் முனைகளை
மேல்நோக்கி மடிக்கவும்


முன்னும்
பின்னும்
மட்டப்படுத்தி இழுக்கவும்


இரண்டு மேல் முனைகளையும்
பக்கவாட்டில் இழுக்கவும்





# ஆமை


இரண்டு மேல் முனைகளையும்
மையம் நோக்கி மடிக்கவும்


திருப்பவும்


இரண்டு ஓரங்களையும்
மையம் நோக்கி மடிக்கவும்


புள்ளி கோடிட்ட
இடங்களில் மடிக்கவும்


புள்ளி கோடிட்ட
இடங்களில் அம்புகுறிபடி
மடிக்கவும்


இரண்டு கீழ்முனைகளையும்
பக்கவாட்டில் மடிக்கவும்


திருப்பவும்


அம்புகுறியிட்ட
இரண்டு முனைகளையும்
உள்நோக்கி மடிக்கவும்



# அன்ன பறவை




# நிஞ்சா ஸ்டார்



# வாத்து



பாதியாக மடித்து
கோடு உருவாக்கவும்



மேல் முனையையும்
கீழ்முனையையும்
மையக்கோட்டை நோக்கி
மடிக்கவும்



இரண்டு முனைகளையும்
வெளி நோக்கி
மடிக்கவும்



கூரிய இடதுமுனையை
முன்னும் பின்னுமாக
சுருக்கி மடிக்கவும்



வெளிப்புறமாக
பாதியாக
மடிக்கவும்



மேல் நோக்கி
மடித்து விரிக்கவும்



பின்பக்கம்
அதேபோல்
மடிக்கவும்



உட்பக்கமாக
பாதியாக
மடிக்கவும்



திருப்பவும்







மேல் நோக்கி இழுத்து
கழுத்து தலைப்பகுதி
உருவாக்கவும்



வலது முனையை
உள்நோக்கி இழுத்து
வால் பகுதியை
உருவாக்கவும்



# குதிரை



மேலும் கீழுமாக
இடம் வலமாக
இரண்டு முறை
மடிக்கவும்



இரண்டு
முனைகளையும்
உள்நோக்கி
மடிக்கவும்



நான்கு முனைகளும்
ஒரே புள்ளியில்
சந்திக்குமாறு
சரிசெய்யவும்



இரண்டு ஓரங்களையும்
மையக்கோட்டை நோக்கி
மடித்து விரிக்கவும்
அதையே பின்பக்கமும்
செய்யவும்



கீழ் முனையை
புள்ளிக்கோட்டின்படி
மடித்து விரிக்கவும்



மேல் முனையிலிருந்து
அம்பு கோடுவரை
வெட்டவும்
அதையே பின்பக்கமும்
செய்யவும்



# குதிரை



புள்ளிக்கோட்டின்படி
உள்நோக்கி மடிக்கவும்
பின்பக்கமும் அதே போல்
செய்யவும்



ஒரு முனையை
தலையாகவும்
ஒருமுனையை
வாலாகவும்
உருவாக்கவும்



கீழுள்ள நான்கு
கால்களையும்
2 செ.மீ. உள்நோக்கி
மடிக்கவும்



வாய் பகுதியும்
அதே போல்
செய்யவும்

## பாம்பு


மையக்கோட்டிலிருந்து
மேல் பக்கம் பாதியாகவும்
கீழ்பக்கம் பாதியாகவும் மடிக்கவும்
மையக்கோட்டிலிருந்து
மேல் பக்கம் பாதியாகவும்
கீழ்பக்கம் பாதியாகவும் மடிக்கவும்
அதேபோல் இடதுபக்க
முனையையும் மடிக்கவும்
வலது முனையிலிருந்து
2 செ.மீ. இடைவெளிவிட்டு
3 இடங்களில் முன்னும் பின்னும்
சுருக்கி மடக்கவும்
இடது பக்க கூரிய முனையை
கீழ்நோக்கி மடித்து தலை உருவாக்கவும்
தலைப்பகுதியை
1 செ.மீ. உட்பக்கமாக
மடிக்கவும்

## கொக்கு


மேலிருந்து கீழாக
பின் வலமிருந்து
இடமாக மடித்து
கோடு உருவாக்கவும்
அதேபோல் நான்கு
முனைகளும் எதிரெதிராக
சந்திக்குமாறு
மடிக்கவும்
பாதியாக
மடிக்கவும்
நான்கு முனைகளும்
ஒருபுள்ளியில்
சந்திக்குமாறு
குவித்து மடிக்கவும்
பின்
மட்டப்படுத்தவும்
இரண்டு ஓரங்களையும்
மையக்கோட்டை
நோக்கி மடிக்கவும்
பின்பக்கம்
அதே செய்யவும்
கீழ்முனையை
மேல்நோக்கி விரிக்கவும்
பின்பக்கமும்
அதேபோல்

# கொக்கு



முன் பக்கமும் பின் பக்கமும் மட்டப்படுத்தி சரிசெய்யவும்



கீழ் பக்கம் இரண்டு ஓரங்களையும் மையத்தைநோக்கி மடிக்கவும்

இரண்டு கால்களையும் மேல்நோக்கி உட்பக்கமாக எதிரெதிர் திசையில் மடிக்கவும்





# கொக்கு



இரண்டு கால்களையும் மேல்நோக்கி உட்பக்கமாக எதிரெதிர் திசையில் மடிக்கவும்



வலப்பக்க கூரிய முனையை உள்நோக்கி மடித்து தலையை உருவாக்கவும்



## முயல்



மேல் கீழ் முனைகளை மையக்கோட்டிற்குள் பாதியாக மடிக்கவும்
வலப்பக்க கூரியமுனையை புள்ளிக்கோட்டின்படி மடிக்கவும்
அதே முனையை மீண்டும் பின்னோக்கி பாதியாக மடிக்கவும்
திருப்பவும்
இடது கூரிய முனையை வலப்பக்கம் நோக்கி பாதியாக மடிக்கவும்
உட்பக்கம் பாதியாக மடிக்கவும்
கூரிய முனையை மேல்நோக்கி இழுக்கவும்
மையக்கோட்டில் வெட்டவும்




## கூடை



பாதியாக மடிக்கவும்
புள்ளிக்கோட்டின்படி மடிக்கவும்
புள்ளிக்கோட்டின்படி மடிக்கவும்
மேல் பக்கத்திலுள்ள முதல் தாளை கீழ்நோக்கி மடிக்கவும்
பின்புறமாக மடிக்கவும்

## புறா



பாதியாக
மடிக்கவும்
புள்ளிக்கோட்டின்படி
மடிக்கவும்
மேல் பகுதியிலுள்ள
முக்கோண பகுதியை
பின்பக்கம் மடிக்கவும்
2 மேல்
முனைகளையும்
கீழ்நோக்கி
மடிக்கவும்
புள்ளிக்கோட்டின்படி
மடிக்கவும்
வலப்பக்க
மேல்பகுதியை
இழுத்து
மட்டப்படுத்தவும்
எதிர்ப்பக்கமும்
அதையே
செய்யவும்
புள்ளிக்கோட்டின்
படி
மடிக்கவும்
பாதியாக
மடிக்கவும்




புறா



இடப்பக்க
கூரிய முனையை
உட்பக்கமாக
மடித்து
கால்கள்
உருவாக்கவும்
பின்பக்கமும்
அதையே
செய்யவும்
மேல் பக்க
கூரிய முனையை
உள்பக்கம்
குவித்து மடித்து
தலையை
உருவாக்கவும்
முன்னும்
பின்னுமாக
சுருக்கி மடித்து
வால் உருவாக்கவும்



## குக்கூ குழந்தைகள் வெளி

*காற்று ஓய்ந்த பின்னும்*
*உதிர்கின்றன*
*மலர்கள்*
*பறவையின் அலறலில்*
*ஆழமுறுகிறது*
*மலையின் மௌனம்*

*-ஜென் துறவி*

*சிறுவர்களின் விநோதங்களும், கற்பனைகளும் கருக்கொள்ளும் அவ்வயதில் அவர்களின் உலகு விரிவு கொள்ள தடைகளாக இருந்து வரும் அனைத்து சூழல்களையும் தவிர்ப்பதை நோக்கமாக்கி எவ்வித நிராகரிப்புகளும், பயங்களுமின்றி எதிர்வரும் உலகில் ஸ்திரமான அடிப்படைகளை உருவாக்க எத்தனிக்கும் ஒரு முயற்சியாக செயல்பட்டு வருகிறது குக்கூ.*

*அரசு பள்ளிகள், ஆதரவற்றோர் மற்றும் தெருவோரச் சிறுவர்கள், பழங்குடி இனத்தவர், ஒடுக்கப்பட்டோர் மற்றும் கல்வியைத் தொடர முடியாத குழந்தைகள் இன்னும் வண்ணங்களை அறிந்திடாத எத்தனையோ சிறுவர்களின் உலகை விரிவான பாதைக்கு கொண்டு வரும் முயற்சியைத் தொடர்ந்து செயலாற்ற குக்கூ வேண்டுவதெல்லாம் ஒரு எளிய சந்தர்ப்பம்.*

*cuckoochildren@gmail.com / facebook.com/cuckoochildren*